# ஸஞ்சாரி

*அவன் ஒரு நல்ல பிராமணப் பையன்.*

*மீன் வறுவல் மணத்திலும், பூணூலை எரித்துவிட்ட வீரத்திலும், ஸிகரெட் புகையிலும் தன் பிராமணத்தனம் மடிந்துதான் தன் வகுப்பிலிருந்து விடுதலை அடைந்துவிட்டதாக அவன் எண்ணினான்.*

*அப்படியும் அவன் ஒரு பிராமணப் பையனே.*

*இதை அவன் அடிக்கடி நிரூபித்தான்.*

*அவனுக்குச் சில சுணக்கங்கள் ஏற்படுவதுண்டு.*

*"இன்னிக்கு புத்த விஹார் போலாமா?"*

*"வேண்டாமே, ரங்கா. வயத்து வலி."*

*" 'அந்த' வலியா?"*

*"ம்"*

*தன்னை அறியாமல் அவன் ஓரடி விலகிவிடுவான். பிறகு அவளுடன் பிணையும் விரல்களில் ஒரு கூச்சம் இருப்பதாக அவளுக்குத் தோன்றும். அவன் வீட்டுக்குப் போய்க் குளிப்பானோ? தன்னைச் சுத்தப் படுத்திக்கொள்வானோ? அதெல்லாம் செய்யாவிட்டாலும் அந்த மூன்று நாட்களும் மர விரல்களால் தன்னைத் தொடுவானோ? சபிக்கப்பட்டவளைப் போல் பார்ப்பானோ?*

*"என்ன யோசனை?"*

*"ம்? ஒண்ணுமில்லையே."*

*நீ ஒரு பிராமணன். வைதீக வேஷங்களைத் துறந்துவிட்டாலும், நீ ஒரு பிராமணன். என்னை இப்போது என் உடைகள் இல்லாமல் உன்னால் பார்க்க முடியுமோ? என் வயிறை, இதமாகத் தடவ முடியுமோ? தடவிப் பின் ஏதோ ஒரு உணர்வில் நீ கையை அலம்பிக் கொள்வாயோ?*

"பேசாமலே வரயே?"

"என்ன பேசறது"

"ஏதாவது சொல்லேன்"

"நீ ஒரு பிராமணன்."

"என்ன உளர்றே?"

"நிஜம்தான். பிராமணனோட அத்தனை அலங்காரங்களையும் ஒதறியுட்டு நீ அம்மணமா நின்னாலும் அது பொடரிலே ஏறி உக்காந்துண்டு உன்னை வெரட்டும்!"

"கெடையவே கிடையாது. பிராமணனுக்கு செக்ஸ்ங்கறது ஒரு பாவம். நான் ஒரு புரட்சிகரமானவன். எனக்கு செக்ஸ்ங்கறது ஒரு அழகான, வாழ்க்கையோட ஒரு அம்சம்."

சிரிப்பு.

"ஏன் சிரிக்கறே?"

"ஆடம்லேந்து இன்னிவரை எல்லாரும்தான் செக்ஸை அனுப விச்சுண்டு வரா. இதுலே என்ன புரட்சி இருக்கு? பார்க்கப்போனா செக்ஸ் வேண்டாங்கறது வேணா ஒரு புரட்சி."

"அப்படியில்லே. இவ்வளவு சுதந்திரமா, வெளிப்படையா....."

"எங்க வீட்டு நாய் டைகர் மாதிரி."

"ருக்மா, இன்ஸல்ட் பண்றதுக்கும் ஒரு லிமிட் உண்டு."

மௌனம்.

டேய் ரங்கா, வெளிப்படையா எனக்கும் வாழ்க்கையில் செக்ஸ் உண்டு என்பதா சுதந்திரம்? அதை இருட்டில், ரகசியமாய், அவமானத் துடன் செய்துவிட்டு, வெளிச்சத்தில் என்னைப் பார்த்ததும் என் கண்களைச் சந்திக்காமல் பேசுகிறாயே, நீயா புரட்சிகரமானவன்? காலமெல்லாம் ஒரு பெண்ணைத் திருப்தி செய்ய முடியுமோ என்றும் உன் பௌருஷத்தையும் சந்தேகிக்கும் நீ படுக்கையில்கூட என்ன புரட்சி செய்துவிடப் போகிறாய்? செய்துவிட்டாய்? உனக்கு செக்ஸ்ங்கறது விளக்கில்லா வேளையில் விளையும் ஒரு பசி மட்டுமே! நீல ஆகாசத்தின் அடியே, சூரியனின் இதமான வெளிச்சத்தில் பசிய மரங்களின் கீழ், அல்லது அலைகள் மோதும் மணலில் உடலின் மற்றும் மனத்தின் அழகுகள் எல்லாம் பீரிட உன்னால் ஒருத்தியைப் புணர முடியுமா? உன்னால் பஸ்ஸில் போகும் போது, எதிரே வரும் பெண்ணை ஒரு உடலாய் மதிக்காமல் பார்க்க முடியுமோ? அவள் மாரை வெறிக்காமல் இருக்க முடியுமோ? அப்படிப் பார்த்தாலும், அதை ரஸனையோடு செய்ய முடியுமோ? அடேய் பிராமணா...

. . . நீ என்ன புரட்சியைச் செய்யப் போகிறாய்?

"பேச மாட்டியா?"

"பேசலாமே."

பேச்சு வேறு பாதைகளில் ஓடியது.

"ருக்மா, நீ அடிக்கடி குமாரோட பேசறதும், பழகறதும் எனக்குப் பிடிக்கலே."

கட்டாயம் உன் அப்பாவுக்கு அவர் மனைவி வேற ஆம்பளையைப் பார்த்திருந்தால் பிடித்திருக்காது. அவர் அப்பாவுக்கும் அப்படியே. அவர் அப்பாவின் அப்பாவுக்கும். . .

"கேட்ட கேள்விக்குப் பதில் கெடையாதா, ருக்மா?"

"ரங்கா, நீ என்னைப் பத்தி என்ன நெனக்கறே?"

அவன் யோசித்தான்.

எப்படிச் சொல்வது? உன் உடம்பில் ஒரு மிருக அழகு இருக்கிறது. உன் வாழ்வில் எத்தனை மேடு பள்ளங்கள்? நீ என்னை ஏன் விரும்பு கிறாய்? நான் ஏமாந்தவனா? நினைத்தாலே ரத்தம் கொதிக்கிறது. குமா ரோடு நீ பேசுவது என்னை உன் பின்னால் ஓடி வரவைக்கவா? நான் என்ன உன் செல்ல நாயா? நீ ஒரு கர்வி. உன் உடம்பில் வெறியூட்டும் ஒன்று இருக்கிறது. நீ சற்றே நாணமுடையவளாக, வார்த்தைகளில் தாகத்தைக் கொட்டாமல் அடக்குபவளாக, நான் பெண் என்று நினைக்கும் அம்சங்களை உடையவளாக இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! நீ நேரில் வந்து "ரங்கா, மழை பேயறது பாரேன். மரம் எல்லாம் சொட்டச் சொட்ட நனைஞ்சு, பூவெல்லாம் குளிச் சுண்டிருக்கற இப்போதான் எனக்கு நீ வேணும்" அப்படீன்னு சொல்லி என் கண்ணுக்குள்ளே அம்பு மாதிரி தொளச்சுண்டு பார்க்கறச்சே, முதுகுத்தண்டு சிலிர்த்து எனக்கே கூசுகிறது. நீ ஒரு பிட்ச்.

"சொல்லேன், ரங்கா."

"ஐ லவ் யூ ருக்மா."

அவள் தன் கரத்தை அவன் கரத்துடன் பிணைத்தாள்.

இது உண்மையா ரங்கா? லவ் என்றால் என்ன? நமக்குத் தெரியுமோ? நீ சொல்லும் சில சொற்கள் அடிவயிற்றில் சீறிப்பாய்ந்து நெஞ்சை முட்டுகிறதே. இதுவும் லவ்வா? நான் உன் உடைமைப் பொருளா? நீ அரசோச்சும் ராஜ்யமா? ஒரு முறை உன்னிடமிருந்து எதையோ கோபத்துடன் பிடுங்க வந்தபோது, என்னைக் கீழே தள்ளி விட்டுப் பார்த்தாயே, அப்போது குதற வரும் நாயின் பைத்தியக்கார வெறி உன் கண்களில் எனக்குத் தெரிந்தது. இதுவும் காதலா? என்னை நீ மதிக்கிறாயா?

"டூ யூ லவ் மீ, ருக்மா?"

"ம்? ஆமாம். அப்படித்தான் நினைக்கிறேன்."

"அப்புறம் என்ன 'உம்'முன்னு மூஞ்சியை வெச்சுண்டு?"

"சரி, கனாட் ப்ளேஸ் போலாம். வெளக்கெல்லாம் பளிச்சுன்னு எரிஞ்சிண்டிருக்கும். அந்த வட்டத்துலே இருக்கிற பார்க்லே உட்காந்துக்கலாம்."

ஸல்மாவுக்கு வயது முப்பத்தைந்தாம். அவளே சொன்னாள். "ருக்மா, உன்னை ஒருத்தன் காதலிக்கிறான் என்றால் அவனை விட்டுடாதே. என் வயதில் தனிமை கொல்லும் அப்புறம். யாரை யென்றுதான் சாப்பிடக் கூப்பிடுவது தினமும்? அப்புறம் ஒருநாள் திடீர்னு மேஜை மேல் சப்பாத்தியும் ஆலுவும் உன்னை முறைச்சுப் பார்க்கும். பாதுகாப்பு அவசியம், ருக்மா. ஆண் பொண் ரெண்டு பேருக்குமே" என்றாள்.

உண்மையாகவா? எது பாதுகாப்பு? ரங்கா இப்படிக் கூட நடந்து வருவதா? இரவில் கையை மேலே போடுவதா? தான் ஆக்ரமித்த ஒரு கோட்டையைப் போல அவளை நடத்துவதா?

"கட்டாயம் அதுக்காக சில தியாகங்கள் செய்யணும்" – ஸல்மா சொன்னாள்.

அந்தத் தியாகங்களுக்கு உரியதா அந்தப் பாதுகாப்பு? அவன் என்னை ஆக்ரமிக்க விட்டு, நான் அவனை ஆக்ரமித்து, நெஞ்சைக் குடையக்குடைய நிகழ்ச்சிகள் நடக்கும்போதே, அதையெல்லாம் ஒரு தீவிரமான அன்பு என்று நினைத்து, ஏமாற்றிக்கொள்வதா அந்தப் பாதுகாப்பு? இரு அன்பு செலுத்தும் உள்ளங்கள் ஒரே கூரையின் கீழ் வாழ்வது எவ்வளவு பெரிய கொடுமை? காலையில் எழுந்தது முதல், இரவு கண்மூடும் வரை அவன் தன் வீட்டிலேயே தன்னுடனே இருந்தால், ஒரு நாள் இரவு அவள் வீரிட்டுவிடுவாளோ? அப்படி இருவர் சேர்ந்து வாழ்வது – திருமணம் செய்துகொண்டோ, செய்து கொள்ளாமலோ – ஒருவரை ஒருவர் திருப்தி செய்துகொள்ளும் ஒரு ஏற்பாடு அல்லாமல் வேறு என்ன?

ரங்காவுக்கு எத்தகைய அன்பு பிடிக்கும்? அவன் பேசப்பேச அவள் கேட்டு, அவன் மற்றவருடன் பழகுவதைச் சகியாமல் பொறாமைப் பட்டு, கோஸ்லரைப் பற்றி விவாதித்து, பூரண 'சுதந்திரத்தைப்' புரிந்து கொண்டு இருப்பதுதான் அவன் அன்பு.

"ருக்மா, நாம ரெண்டு பேரும் ரொம்பவே சந்தோஷமா இருக்கப் போகிறோம். இல்லையா?"

"ஆமாம்."

அவள் த்வனியில் இருந்த அசிரத்தையில் அவனுக்குச் சுணக்கம் ஏற்பட்டது. அவன் அன்புதான் எவ்வளவு உயர்ந்தது! இவள் அதற்கு உரியவளா? இவள் மற்ற பெண்களை விட வித்தியாசமானவள்தான்.

அதுவே சில சமயம் உறுத்தியது. அவனுக்கு அவள் தைரியமும் மதர்ப்பும் வெளிப்படையான பேச்சும் அவன் கற்பனை செய்த பெண்ணின் குணங்களோடு பொருந்தவில்லை. மானைக் கண்டால் மிரளும் பெண்ணாக இல்லாவிட்டாலும், பெண் என்றால் கொஞ்சம் பயப்பட வேண்டும் என்றே தோன்றியது, "பிராணேசா, நீயே கதி," என்று சொல்லாவிட்டாலும், அவன் இல்லாவிட்டால் அவள் வாழ் வில் சூன்யம் கவியும் என்ற நம்பிக்கை அவனுக்குத் தன் மேலேயே ஓர் உறுதி பிறக்க வைக்கும் என்று தோன்றியது. அதே சமயம் அவன் சுதந்திரம் அவனுக்குப் பிடித்த ஒன்று. முதல் முறை ஏதோ ஒரு உணர்ச்சிகள் மீறிய கட்டத்தில் அவன் அவளைப் பிரிந்தபோது, "நீ போனால் என் மனத்தில் ஒரு பெரிய மரம் வேரோடு சாயும்," என்று அவள் எழுதியபோது கொஞ்சம் பெருமிதமாகவே இருந்தது. அதே சமயம் அவள் அவனை விலங்கிடுவது போல தோன்றியது. அவன் சுதந்திரத்தின் தத்துவத்தை அவளுக்கு போதித்தான்.

"ருக்மா, இன்னிக்கு நாம அந்த பாரதியாரின் கவிதைக்கு மெட்டு போட்டு, நாட்டியத்துக்கு அமைப்பு தரலாமா?

"சரி, குமார்."

குமார் மிருதங்கம் வாசிப்பவன். தாளம் அவன் விரல் நுனிகளில் கட்டுண்டு கிடக்கும் ஒன்று.

"மழை" கவிதை.

திக்குகள் எட்டும் சிதறி — தக்கத்
தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட தீம்தரிகிட.

திஸ்ர நடையில், நாட்டை ராகத்தில் அமைத்தான் குமார்.

"மழை வருவதுபோல் தாளம் இருக்கணும் ருக்மா. பாவத்தில் ஒண்ணும் இல்லை. ஆடிண்டே வரப்போ மழை 'சோ'ன்னு கொட்டற மாதிரி இருக்கணம். உன் மூஞ்சியை மறந்துடணும் பார்க்கறவா இந்த நாட்டியத்துலே. நீதான் மழை, உனக்கு முகம், கண், வாய் கெடையாது. சத்தமும், அதுலே இருக்கற புல்லரிப்பும்தான்."

இரண்டு மணி நாழிகை மழையாய்ப் பெய்தாள். முடிந்தபோது பிறந்த திருப்தியில் நெஞ்சை ஓர் அழுகை கவ்விக்கொண்டது. மொட்டை மாடியில் அடித்த ஜில்லென்ற காற்றில் வியர்வையோடு நின்றபோது, அவளே காற்றாய் மாறிப் பறப்பது போலத் தோன்றியது.

"ருக்மா"

"என்ன, குமார்"

"நீ நன்னா ஆடினே."

"தாங்க்யூ. நீ தாளம் போட்டதுதான் எனக்கு ஆதாரம், குமார்."

"கேன் ஐ கிஸ் யூ குட் நைட் டு ஷோ மை அப்ரீஸியேஷன்?"

அந்த அருமையான மாலைப் பொழுதுக்கு அது ஒரு பொருத்தமான முடிவாகவே பட்டது.

அவள் தனிமையின் காரணமே உடல் சுதந்திரத்துக்காக என்று நினைத்து, அவளைப் படுக்கை ஒன்றிலேயே கற்பனை செய்பவன் அல்ல குமார். அவன் ஒரு கலைஞன்.

"ம்."

பின்பக்கமாய் வந்து பின் அவளைத் தன்புறம் திருப்பி, வியர்வை வழியும் கன்னங்களை இருபுறமும் பற்றி, இன்னமும் நாட்டை ராகத்தை முனகும் இதழ்களை முத்தமிட்டான் குமார்.

"என்ன ருக்மா இவ்வளவு நேரம்?"

"ஆடிண்டிருந்தேன், ரங்கா, போது போறதே தெரியலே."

"என்னை விடவா நாட்டியம் முக்கியம்?"

"அப்படீன்னா?"

"எது மேலேயும் உணர்ச்சி பூர்வமா சார்ந்து இருக்கக் கூடாது ருக்மா. கலை உன்னை அடிமையாக்கக் கூடாது. நீ சுதந்திரமா, எல்லா விலங்குகளையும் உதறிவிட்டு..."

"உறவுகள் விலங்கு இல்லையா, ரங்கா? நான் ஆடறது உனக்குப் பொறாமையா இல்லே? பொறாமை ஒரு விலங்கு இல்லையா?"

அவனுக்கு அந்தக் கேள்வி பிடிக்கவில்லை.

நீ என்ன ஆடுவாய் ருக்மா? உனக்கு எந்தப் போராட்டமும் இல் லாத அமைதி பற்றி தெரியுமோ? உலகத்தையே பகிஷ்காரம் செய்யத் தெரியுமோ? உனக்கு நான் இல்லாவிட்டால் குமார். அவனும் இல்லா விட்டால் வேறு ஒருத்தன். நீ உடம்பால் ஜீவிப்பவள். நீ என்னை அணைச்சுக்கறபோது வேறு யார்யார் அணைப்பை நினைத்துப் பார்க்கிறாய்?

"சொல்லு, ரங்கா."

"எல்லாமே விலங்குதான். நான் உன்னை விரும்பறதா சொன் னேனோ இல்லையோ, அதுவே விலங்குதான். அதனாலேதானே என்னை அலைக்கழிக்கறே?"

"கோவமா, ரங்கா?"

அவள் அவன் தோள்களைப் பற்றினாள்.

"இன்னிக்கு ஒண்ணு நடந்தது."

"சொல்லு."

"குமார் என்னிக்குமே உணர்ச்சிவசப்பட மாட்டான். இன்னிக்கு ஆடின ஆட்டம் அப்படி. அவனே கனிஞ்சுபோயிட்டான். என்னைக் கிஸ் பண்ணினான்."

இந்த உதடுகளையா? அவனுக்கு உரியவற்றையா? இதை ஏன் என்னிடம் சொல்லுகிறாய்? என்னைப் பொறாமைப்பட வைக்கவா? ஏங்க வைக்கவா? உன் பாபுலாரிடியை வெளியிடவா? நான் ஏமாந்த வனா? நீ ஊரை எல்லாம் மேய்ந்துவிட்டு வந்தால் ஏற்றுக்கொள்ளும் சோடை போனவனா? நீ என்னதான் நினைக்கிறாய் என்னைப் பற்றி? உன் சுதந்திரம் எல்லாம் நினைத்தவனை முத்தமிட்டுப் படுக் கையில் சாயவா? கேவலம் உடம்பிலா உன் சுதந்திரம்?

"என்ன ரங்கா, ஏதாவது சொல்லேன்"

"சுதந்திரமா இருன்னா கண்டவனைப் போய் முத்தம் குடுக் கணம்னு அவசியம் இல்லே."

"இதுக்கு ஏன் இவ்வளவு இம்பார்டன்ஸ் தரே, ரங்கா? இதைப் பெரிசா மதிச்சு ராத்தூக்கத்தைக் கெடுத்துக்கறதும், ஒண்ணுமே இல் லேன்னு சந்நியாசியா போய் தப்பிச்சுக்கறதும், ரெண்டுமே ஸெக்ஸ்ங் கறதுக்கு அதுக்கு மீறின பவிஷைத் தரதுனாலதானே?"

நீ பேசுகிறாயா? நீ அறிவுஜீவி என்பதைக் காட்டவா? ருக்மா, மனிதர்கள் எல்லாவற்றையும் பயன்படுத்திக்கொள்கிறார்கள். நான் சுதந்திரத்தைப் பற்றிச் சொல்லப்போக நீ அந்த விளக்கத்தை எனக்கே சொல்கிறாயா? யூ பிட்ச்.

"பேச மாட்டியா, ரங்கா?"

"சுதந்திரத்தைப் பத்தி உன்னாலே புரிஞ்சுக்க முடியாது, ருக்மா. நீ அவ்வளவு நீசமானவ."

"சுதந்திரம்னா என்ன ரங்கா, உன் டிக்ஷனரியிலே? அது உனக்கே இருக்கற ஏகபோக உரிமையா?"

"அதைப் பத்தித் தெரிஞ்சுக்க நீ உன்னை சுத்தீகரிச்சுக்கணம், ருக்மா. உன்னோட மிருக உடம்போடு அலையக்கூடாது."

அவள் உரக்கக் கத்தினாள்.

"நீ ஒரு நாத்தமெடுத்த, சாக்கடையிலே ஊறிப்போன பிராமணன். உன் அப்பா உங்க அம்மாவைச் சந்தேகிச்சு வீட்டிலே பூட்டிண்டு போய் அவ ஒருநாள் தலையை விரிச்சுண்டு பைத்தியமா நின்னா இல்லையா? நீ அதே அப்பாவோட பிள்ளைதான். பாஸ்டர்ட்."

பேசி முடித்ததும் மூச்சு வாங்கியது.

முதல் சண்டை, அதனால் முதல் கூடலும் சற்றுத் தீவிரமாகவே இருந்தது.

"ருக்மா, சுதந்திரம் எதுவா வேணும்னா இருந்துட்டுப்போகட்டும். அதுக்காக நாம்ப சண்டை போடறதுலே அர்த்தம் இல்லை."

"ஆமாம், ரங்கா"

“நம்ப ரெண்டுபேரும் ஒரு அபூர்வ ஜோடி, ருக்மா. நாம்ப பிரியவே கூடாது.”

“வெளியிலே போலாமா?”

“ம். நீ புடவை கட்டிண்டு வாயேன். இந்த லுங்கியிலே நீ வந்தா எல்லாரும் பார்ப்பா உன்னையே.”

ஒரு நிமிடம் பிடரி சிலிர்த்தது.

“சரி, புடவையே கட்டிக்கறேன் – உனக்காக.”

இந்தப் புடவை கட்டுவதில் கூடவா நீ குறுக்கிடுவாய், ரங்கா? தலைப்பு சற்றே தழைந்துவிட்டால், ரங்கா, நீ காதருகில் “தலைப்பு” எனும்போது, நீயே மாமியார், மாமனார், நாத்தனார் போன்ற பயங்கரமாய் வர்ணிக்கப்படும் சகல ரூபங்களோடும் காட்சியளிக்கிறாய்.

“ருக்மா, நான் பெங்களூருக்குப் பத்து நாள் போகணம்.”

“போயேன்”

“நான் ஒண்ணு சொன்னா கோவிச்சிப்பியா?”

“ம்ஹூம்.”

“நான் போனா, நீ இங்கே யாரோடயாவது. . . . . . படுத்துப்பியா?”

அவள் நிமிர்ந்து அவனைப் பார்த்தாள்.

“என்னைப் பத்தி என்னதான் நினைக்கறே?”

“நீ பதில் சொல்லு.”

கோபம் பொங்கியது.

“ஆமாம், பத்து நாளும் பத்து பேருக்கு ரிஸர்வ் பண்ணி வெச்சி ருக்கேன்.”

“நீ என்னைக் கஷ்டப்படுத்தறே, ருக்மா.”

“யூ ஆஸ்க்ட் ஃபார் இட்.”

“எனக்கு நீ ப்ராமிஸ் பண்ணு, அப்படிப் பண்ண மாட்டேன்னு.”

“அந்த ப்ராமிஸ் இல்லாட்டா நான் ஊரை மேய்வேன்னுதானே நினைக்கறே? அந்த ப்ராமிஸ் கேவலமானது.”

“ருக்மா, நான் உன்னை ரொம்ப லவ் பண்றேன். உன் நல்லதுக்குத் தான் நான் சொல்றேன். மத்தவா உன்னை உபயோகிக்கப் பார்ப்பா. அப்பறமா நீ மனசு கஷ்டப்படுவே. உனக்குத் துக்கமே வராம நான் உன்னைப் பாதுகாக்கணம்னு ஆசைப்படறேன்.”

“எனக்கு என்னைப் பாதுகாத்துக்கத் தெரியும்.”

“அந்த லட்சணம்தான் தெரியறதே!”

அறையின் முனைக்கு விடுவிடுவென்று நடந்து போனவள், கதவை அடையும் முன்பே, வெடித்துப் பொங்கிச் சரிந்தாள்.

தரையில் மார்பு அமுங்கிப் போக அழுகை வெடித்தது.

"ஏய் ருக்மா, ஏன் அழறே?"

அவளைத் தரையிலிருந்து தூக்கி எடுத்து அணைத்தான்.

பதிலே கூறாமல் அழுதாள் ருக்மிணி.

"நான் சொன்னது தப்பா?"

தலையை ஆட்டினாள்.

"அப்படீன்னா ஏன் அழறே?"

"தெரியலே."

"தெரியாம ஒரு அழுகையா?"

நான் எதுக்காக அழறேன்? ஒருநாள் நடனம் ஆடிவிட்டு வந்ததும் சதங்கையைத் தூக்கி எறிந்துவிட்டு, நிலைப்படியை அடைத்துக் கொண்டு நின்ற அப்பா உதிர்த்த சொற்களுக்கா இன்று அழுகிறேன்? மயிர் அடர்ந்த மார்பைத் தட்டி, "நீ என் பெண்ணா அல்லது கூத்தியா?" என்று அப்பா சொன்னதா இன்று வலிக்கிறது? கூடவே படித்த பையன், திருமணமானதும் மனைவியை என்னுடன் அறி முகப்படுத்தாமல் போன புறக்கணிப்புக்காகவா அழுகிறேன்? ஒவ்வொரு குளிர்காலத்திலும் கை வலிக்கவலிக்க ஸ்வெட்டர் பின்னித் தந்து, பின்னர் திருமணத்துக்கு எல்லா ஏற்பாடும் செய்த பின்னர், "கூடப் படுக்கும் பெண்ணையெல்லாம் மணக்க வேண்டும் என்று கட்டாயமா?" என்று கேட்ட ராஜனிடம் கொண்ட குழந்தைத்தன மான காதல் முறிவுக்கா? ரங்கா என்னை அவமதிப்பதாலா? எதற்கென்று அழுகிறேன்?

"சொல்லும்மா, ருக்மா. அழக்கூடாது."

உடனே எழுந்து கண்ணைத் துடைத்துக்கொண்டாள்.

"நான் அழலையே!"

"நான் பெங்களூர் போறேன். பத்ரமா இரு."

"சரி ரங்கா."

ருக்மா, நீ அழுதுவிட்டாய். இதெல்லாம் ஒரு பெண்ணின் ஸாக ஸங்கள். நீ கெட்டிக்காரி. ப்ராமிஸ் தரவில்லை. பூரண சுதந்திரத்துடன் என்ன செய்வாய்? குமாருடன் போவாயா? இல்லை, அந்த தேவ னோடா? நான் உன்னை நம்பவில்லை.

"ஆக்ரா போலாமா, ரங்கா?"

"பெங்களூர்லேந்து இப்போதானே வந்தேன். உடனேயா?"

"போலாமே, நாளைக்கு ராத்திரி பௌர்ணமி."

"சரி"

“இங்கேயெல்லாம் வந்தா உனக்குப் பழைய ஞாபகம் எல்லாம் வரும்மா, ருக்மா?”

“இல்லியே.”

“வந்தாக்கூட நான் புரிஞ்சுப்பேன். என்ன இருந்தாலும் மறக்க முடியாது, இல்லியா? ராஜனோட நீ வந்தப்போ இதே தாஜ்மகாலைப் பார்த்திருப்பே. அவன் அழகா பேசியிருப்பான். அணைச்சுக்கூட இருக்கலாம். பூச்செடிக்குப் பின்னாலே போனா முத்தம் கூட... ...”

“ஸ்டாப் இட், ரங்கா”

“கோச்சுக்காதே ருக்மா. நான் புரிஞ்சுக்கறேன். இப்படிச் ‘சள்னு’ விழாதே. என்ன இருந்தாலும் பழைய ஞாபகங்கள் வரும் இல்லையா?”

பௌர்ணமிச் சந்திரன் வீணாகப் போயிற்று.

“அன்புள்ள ரங்கா.

நான் இரண்டு நாட்கள் வேறு இடத்தில் இருப்பேன்; அப்புறம் சந்திக்கலாம்.

உன்
ருக்மா”

சீட்டு, கதவின் தாழ்ப்பாளில் ஏறிக்கொண்டது.

யமுனை மந்தகதியில் ஓடும் அந்த இடத்தின் அமைதி அவளுக்குத் தேவை.

ஒரு சிறு படகில் இருவர் ஏறிப்போனார்கள் – காதலர்கள். அக்கரைக்குப் போய் அமர்வார்கள்; பேசுவார்கள்; திட்டம் போடு வார்கள்; தங்கள் வாழ்க்கைகளை இவர்கள் வரையறுத்து வைத்து விடுவார்கள்; ஒரு நல்ல ஏற்பாட்டைச் செய்துகொள்வார்கள்.

அவள் செய்யக் கூடியவை:

சமையல்

அன்பு செலுத்தல்

அம்மாவாதல்

அவனையே காதலித்தல்

அவனையே அடுத்த பிறப்பிலும் அடைய வேண்டிக்கொள்ளல்

அப்படி இல்லையென்றால் எல்லாவற்றையும் சகித்துக்கொள்ளல் – அல்லது

இன்னொருவன்; கிடைத்தால்.

அவன் செய்வான் என்று எதிர்பார்ப்பவை:

சம்பாதித்தல்

குலத்தை நசிக்காமல் வளர்த்தல்

அன்பு செலுத்துதல் –

எப்போதெல்லாம் அவள் உரியவள் என்று

எண்ணுகிறானோ

அப்போது

அவள் பிடாரியாகப் போனால் இவன்

சகித்துக்கொள்ளல் – அல்லது

மற்றொருத்தி.

எழுதாத இந்தச் சட்டங்களோடு இவர்கள் ஏற்பாடு செய்துகொள்வார்கள். ஒருவேளை இந்த மண்ணோடு வாசனை மீறியவர்களானால், அவன் ராமன்தான்; அவள் சீதைதான். மாறி அமைந்துவிட்டால் இவர்களை ரட்சிக்கவே சில மத விற்பன்னர்கள் உண்டு. ஒரு சிக்கலும் சிக்கலாக நின்றுவிடாத மண் இது. சப்பைக் கட்டு கட்டி, அதை தெய்வீகமாக்க சில யாக சாலைகள் நடத்தும் வியாபாரிகள் உண்டு.

ருக்மணி புன்னகைத்தாள். தனக்குக் கோபம் ரொம்ப வருகிறது என்று நினைத்துக் கொண்டாள்.

யமுனை அங்கே அழுக்காகத்தான் ஓடும். ஆனாலும் அதில் ஒரு நளினம்.

லேசாகத் தூறியது. யமுனைக் கரையோடு நடந்து போனால் அந்தச் சுடுகாடு வரும். போலாமா?

மெல்ல எழுந்து கரையோரமாக நடந்தாள்.

இங்கே பெண்கள் வரக்கூடாதாம். சற்று தூரத்தே ஒரு பாடை போயிற்று. அங்கேயே நின்றுகொண்டாள்.

மழை நின்று மண் வாசனை அடித்தது, சிறிது நேரத்தில் தூரத்தே தீப்பொறி பறந்தது. ஓர் உடம்பு எரிகிறது.

தீ ஜ்வாலை நீலமாயும் ஊதாவாயும் மேலெழுந்தது. ஈரத் தரையில் உட்கார்ந்து கொண்டாள்.

அவளும் அத்தீயும் மட்டுமே அங்கு எதிரும்புதிருமாக வீற்றிருப்பது போல் தோன்றியது. அத்தீயினுள் விழிகளைத் துளைத்துப் பார்த்த போது, அம்மாவின் நீண்ட முடியும், அப்பாவின் கனத்த உடம்பும், ராஜனின் அன்புக் கண்களும், ரங்காவின் மென் உதடுகளும், குமாரின் தாளம் சொட்டும் விரல்களும் விசுவரூபமெடுத்து வந்தன. வந்த வேகத்திலேயே நீலத் தீயில் கரைந்து போயின. எல்லாம் போய் தீயும் அவளும் மட்டுமே எஞ்சியதுபோல் தோன்றியது. பாடையில் உள்ள முகம் தெரியவில்லை. ரொம்ப உற்று நோக்கியபோது, சுருண்ட

முடியுடன், கருப்பில் பொட்டிட்ட புடவையோடு அங்கே படுத்திருந்தது, யார்? அவளேவா? 'ஜிவ்'வென்று ஒரு வேகம் நாபியைத் தாக்கியது.

எழுந்து வந்தபோது மீண்டும் தூறல் தொடங்கியது. எல்லா ஜ்வாலையும் குளிர்ந்துபோய் விட்டது. மழைச் சொட்டுக்களுடன் அவளும் ஒரு மழைத்துளியாய், யமுனை நதியுடன் ஓடும் மழைநீராய். மழைக்குப் பின் தோன்றிய வானவில்லில் கண்ணைப் பதித்து, அதனுடன் உலகத்தையே ஸஞ்சாரம் செய்யும் வர்ணக்கலவையாய் தான் மாறுவது போல் உணர்ந்தாள்.

அவள் பந்தம் அவளைச் சுற்றி பல ரூபங்களோடு விரிந்த வாழ்க்கையுடன்தான். சிவப்புத் தோல் உரியக் கிடக்கும் பச்சைக் குழந்தை, சுழித்து ஓடும் யமுனை, எங்கோ கதறும் ஒரு சோகம், இதழ் விரிக்கும் புன்னகை, வானத்தில் ஓலமிடும் இடி என்று வியாபிக்கும் வாழ்க்கையுடன்தான் அவள் பிணைப்பு; எந்தத் தனி மனிதனிடமும் இல்லை. இதுதானோ சுதந்திரம்?

இருக்கலாம். சுதந்திரம் என்பது என்ன, அதன் விளக்கம் என்ன என்பதல்ல அவள் கண்டுகொண்டது. அவள் நரம்புகளில் ஊடுருவிப் பாயும் ஓர் உணர்ச்சியை, வானில் கரும்புள்ளியாய்ப் பறக்கும் பறவையின் சிறகுகளை அவள் மாட்டிக் கொண்டு வேலிகளற்ற பெருவெளியில் ஸஞ்சாரம் செய்ய விரும்பும் வேகத்தை, அன்று அவள் இனம் கண்டுகொண்டாள்.

நீ புரிந்துகொள்வாயோ, ரங்கா? உனக்குச் சுதந்திரம் என்பது ஒரு விளக்கம். நீ அடையவேண்டிய ஓர் எல்லை. அந்த எல்லையே உன் விலங்கு.

மீண்டும் யமுனை நதி ஓரம் உள்ள படிக்கட்டில் அமர்ந்தபோது, மழை வலுக்கத் துவங்கியது. ஒவ்வொரு மழைத் துளியும் அமிர்த தாரையாய் வர்ஷித்து அவளை நனைத்தது.

ரங்கா, உனக்கு அறிவுஜீவியான, ஆனால் ஓர் எல்லைக்குட்பட்ட, சுதந்திரமான, ஆனால் உனக்குக் கட்டுப்பட்ட மனைவி வாய்ப்பாள். நீ சந்தோஷமாகவே இருப்பாய். ஏனென்றால் நீ ஒரு நல்ல பிராமணப் பையன் மட்டுமே.

யமுனையின் பழுப்பு நீரோடு வெளேரென்று மழை நீர் சேர்ந்து கொண்டது. புடவை ரவிக்கையெல்லாம் உடம்போடு ஒட்டிக் கொள்ள, முகம், வாய், கண்களற்ற ஒரு பெரும் மழையில் ஐக்கியமாகி மேகத்தையெல்லாம் பிளந்துகொண்டு தான் பொழிவதாக ருக்மிணி நினைத்தாள்.

'கணையாழி' நவம்பர் 1974